# பகவத் பாதை

BAGAVATH PATHAI

• Volume : 1 • Issue : 14
• மலர்:1 • இதழ்:14

தமிழ் மாத இதழ்

• April 2015 • Annual Subscription Rs. 100/-
• ஏப்ரல் 2015 • வருடச் சந்தா ரூ.100/-

## கணவன் - மனைவி



**ஆன்மிகம் என்பது ஒரு வாழ்வியல் முறை. நாம் எப்படி வாழவேண்டும் என்பதைக் கற்றுக் கொடுப்பது தான் உண்மையான ஆன்மிகம். ஆகவே உண்மையான ஆன்மிகம், இல்வாழ்வுக்கும் கூட உதவி புரிகிறது.**

- ஸ்ரீ பகவத்



மனைவி கணவனிடம் கேட்டாள் : “ஏங்க நாம இறந்து போய் விட்டால், நாம் ரெண்டு பேரும் சொர்க்கத்தில் இப்படி சேர்ந்து வாழ முடியாதாமே?”

“ஆமாண்டி; அதனால் தான் அதனை சொர்க்கம் என்று கூறுகிறார்கள்.” -இது கணவன்.

இப்படி கணவன் மனைவி உறவை நகைச்சுவையாக சித்தரிக்கும் எத்தனையோ ஜோக்குகள் நம்மிடையே வலம் வந்து கொண்டிருக்கின்றன.

கணவன்-மனைவி சேர்ந்து வாழ்ந்திடுவதென்பது சரியான ஒன்றா, அல்லது பிரச்சனையான ஒன்றா?

முல்லா கதையொன்றைக் கேள்விப் பட்டிருப்பீர்கள்.

முல்லாவுக்கும் அவரது மனைவிக்கும் எப்போதும் ஏதாவது ஒரு பிரச்சனை குறித்து சண்டை தான் ஏற்பட்டுக் கொண்டிருக்கும்.

அவர்கள் வீட்டில் ஒரு நாயையும் பூனையையும் வளர்த்து வந்தார்கள். ஒரு நாள் அந்தப் பூனையும், நாயும் ஒன்றின் மீது ஒன்று தலையை வைத்து நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருக்கின்றன.

அதைப் பார்த்த முல்லாவின் மனைவி கூறினாள்: “பாருங்கள்! இந்த பூனைக்கும், நாய்க்குமுள்ள அறிவுகூட நமக்கு இல்லை. அவை எப்படி ஒற்றுமையாக இருக்கிறது பாருங்கள். ”

“அப்படியா?” என்று கேட்ட முல்லா ஒரு நாடாக் கயிறு ஒன்றை எடுத்து, பூனையின் காலோடு நாயின் காலை இணைத்துக் கட்டினார்.

இரண்டையும் இப்படி இணைத்துக் கட்டினால் என்ன ஆகும்?

இரண்டும் ஒன்றையொன்று இழுத்துக் கொண்டு போராடின.

இப்போது முல்லா சொன்னார்: “இப்படி நம்மை கட்டிப் போட்டிருப்பது தான் பிரச்சனை. நீ யாரோ, நான் யாரோ என்றிருந்தால் நாம் கூட சந்தோசமாகச் சேர்ந்திருக்கலாம்; சண்டை எதுவும் இல்லாமலிருக்கலாம்.”

கணவன் – மனைவி உறவு கசப்பானதா?

இப்படி ஓர் உறவு- வாழ்க்கை முறை தேவை தானா?

கல்யாணம் செய்து கொள்ளாத சில பெண்கள் பேட்டி கொடுத்துள்ளதைப் பார்த்துள்ளேன்.

‘‘எனது அப்பாவும் அம்மாவும் எப்போதும் சண்டை தான் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். இப்படியொரு வாழ்க்கை நமக்குத் தேவையா என்று எண்ணி திருமணமே செய்து கொள்ளாமல் இருக்கிறேன்.”

-இப்படி அவர்கள் கூறுகிறார்கள்.

திருமணம் என்றாலே சண்டை சச்சரவுதானா? போராட்டந்தானா? நிம்மதியில்லாத வாழ்க்கைதானா?

நீதி மன்றங்களை எடுத்துக் கொண்டால் விவாகரத்து வழக்குகள் ஆயிரம் ஆயிரமாகக் கூடிக் கொண்டிருக்கின்றன.

திருமணம் செய்து கொள்ளாமல் தனியாக வாழ்ந்திடுவதுதான் சரியாக இருக்குமோ?

படித்த கன்னியாஸ்திரி ஒருவர் கல்லூரியில் விரிவுரையாளராகவும் பணியாற்றி வந்தார்.

அவரிடம் பயின்ற மாணவியருள் ஒருவர், அவரைப் போலவே கன்னியாஸ்திரியாக வேண்டும் என்று ஆர்வம் கொண்டார். அவரிடம் தனது விருப்பத்தைத் தெரிவித்தார்.

அந்த கன்னியாஸ்திரி அந்த மாணவியிடம் தன்னைப் பற்றிய விபரங்களைக் கூறினார். "உன்னைப் போன்ற சிறுவயதில் எனக்கும் இப்படியொரு வாழ்க்கை மீது ஆர்வம் ஏற்பட்டது. கன்னியாஸ்திரியாகவும் ஆகிவிட்டேன். எனது விருப்பப்படியே இப்படி ஆனதால், எனது இளமை காலம் முழுவதும் மகிழ்ச்சியாகவே இருந்தது. அதில் எந்த சந்தேகமும் இல்லை. ஆனால் அந்த மகிழ்ச்சியும் சந்தோசமும் முப்பது, முப்பத்தைந்து வயது வரை கூட நீடித்திருக்கவில்லை. ஒருவிதமான வெறுமை தான் என்னை சூழ்ந்து கொண்டது. அதற்குப் பிறகு இந்த வாழ்க்கையை விட்டு என்னாலும் வெளியே வரமுடியவில்லை. நான் மட்டுந்தான் இப்படி இருக்கிறேனோ என்று பார்த்தால் எனக்குத் தெரிந்த அத்தனை கன்னியாஸ்திரிகளும் இதே மனநிலையில் தான் இருக்கிறார்கள். ஆகவே ஏதோ ஒரு ஆசையில் இங்கே வந்து உனது வாழ்க்கையைக் கெடுத்துக் கொள்ளாதே."

இதுபோல் எத்தனையோ ஆண்கள் திருமணம் செய்து கொள்ளாமல் வாழ்ந்து வருகிறார்கள். ஆரம்பத்தில் அவர்கள் பெரிய வித்தியாசத்தை உணர மாட்டார்கள். வயது ஆக ஆக தங்களது முடிவு சரியல்ல என்பதை உணர ஆரம்பிப்பார்கள். அதன் பிறகு அவர்களால் மண வாழ்க்கைக்கும் வர முடியாது.

இப்போது நமது கேள்வி என்ன?

திருமணம் பிரச்சினைக்குரியதா அல்லது மண வாழ்க்கை தான் சிறந்ததா?

திருமண வாழ்க்கையில் என்னதான் பிரச்சனை? அந்த வாழ்க்கையில் எவரும் வெற்றி பெற்றதில்லையா?

மகிழ்ச்சியாக வாழ்ந்த ஒரு தம்பதியரை ஒருவர் பேட்டி கண்டார். தங்கள் மணவாழ்க்கை வெற்றிகரமாக அமைந்தது பற்றி அந்தக் கணவர் விவரித்தார்.

"ஆரம்பத்தில் எல்லா தம்பதிகளையும் போல் நாங்களும் அடிக்கடி சண்டை போட்டு வந்தோம். வாழ்க்கையில் நிம்மதியே இல்லை. என்ன செய்வது என்று தெரியவில்லை. எனது பேராசிரியரிடம் ஆலோசனை கேட்டேன். அவர் என்னிடம் இரண்டு சீட்டுகளைக் கொடுத்தார்...."

"முதலாவது சீட்டின்படி ஆறு மாத காலம் நடந்து கொள்ளச் சொன்னார். அது வெற்றி பெறாவிட்டால் இரண்டாவது சீட்டைத் திறந்து பார்த்து அதன்படி நடந்து கொள்ளச் சொன்னார்..."

"முதலாவது சீட்டின்படி ஆறு மாத காலம் முயற்சி செய்தேன். வெற்றி கிடைக்கவில்லை. அதனால் இரண்டாவது சீட்டைத் திறந்து பார்த்து அதனைப் பின்பற்ற ஆரம்பித்தேன். அன்றிலிருந்து இன்று வரை எங்களது இல்வாழ்க்கை அமைதிப் பூங்காவாக இருந்து வருகிறது."

அவர் கூறி முடித்ததும், பேட்டி கண்டவர் ஆர்வத்துடன் கேட்டார்.

"அப்படி அந்தச் சீட்டுகளில் என்ன அறிவுரைதான் கூறப்பட்டிருந்தது?"

"முதலாவது சீட்டின் அறிவுரை இதுதான்; "அடக்கிப் பார்." இரண்டாவது சீட்டில் "அடங்கிப் போ" என்று கூறப்பட்டிருந்தது.

உண்மையில் கணவன் மனைவியிடையே உள்ள உறவு எப்படி தான் உள்ளது?

ஒருவரை ஒருவர் ஆட்டிப் படைக்கும் முயற்சியில் இருக்கிறார்களா?

கணவன் மனைவியர் எப்படி தான் தங்களது அணுகுமுறையை வைத்துக் கொள்ள வேண்டும்?

கணவன் – மனைவி – குழந்தை என்பது ஒரு சிறிய அமைப்பு. அந்த அமைப்புக்குள் அந்த மூவர் மட்டுமே இடம் பெற முடியும்.

அந்த அமைப்புக்குள் வேறு எவர் இடம் பெற்றாலும், அது பெற்றோராக இருந்தாலும் சரி, அல்லது மாமனார் மாமியாராக இருந்தாலும் சரி, அவர்கள் அனைவரும் வேற்று மனிதர்களே.

கணவன் – மனைவி – குழந்தை என்ற இந்த சிறிய அமைப்பு அல்லது சிறிய வட்டமானது

தனது எல்லைக்குள் எப்படி நடந்து கொள்ள வேண்டும்?

இந்த சிறிய வட்டத்துக்குள் செயல்படும் கணவன் – மனைவி தங்களுக்குள் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்?

தாங்கள் இருவரும் ஒரு தனி வட்டம் – தனி அலகு – தனி அமைப்பு என்பதை மட்டும் உணர்ந்திருந்தால் போதும்.

அதன்பிறகு அவர்கள் தங்களுக்குக்குள் பல நேரங்களில் விட்டுக் கொடுத்துப் போகலாம்.

சில நேரங்களில் சண்டை கூட போட்டுக் கொள்ளலாம்.

எந்த சண்டை போட்டாலும் அடுத்த நிமிடமே அதனை மறந்து சகஜமாகிக் கொள்வது மட்டுமே ஆரோக்கியத்தின் அடையாளம்.

சண்டை போடும் உரிமையை எடுத்துக் கொண்டவர்களுக்கு அதனை மறந்து சகஜமாகும் கடமையும் உள்ளது.

இல்லற வாழ்க்கையில் வெற்றியடைந்த இன்னுமொரு கணவரை பேட்டி கண்டார்கள்.

அந்தக் கணவர் தனது வெற்றியின் இரகசியத்தைக் கூறினார்.

"எனது மனைவிக்கும், எனக்கும் அன்றாட வாழ்வில் பலவிதமான கருத்து மோதல்களும், சண்டை சச்சரவுகளும் ஏற்பட்டன..."

"ஒவ்வொரு செயலிலும், தான் சொல்வதைத்தான் அடுத்தவர் கேட்க வேண்டும் என்று சண்டை போட்டு வந்தோம். பிறகு நாங்களே ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டோம்..."

"அந்த ஒப்பந்தத்தின் படி சாதாரண அற்பக் காரியங்களிலெல்லாம் மனைவின் முடிவை ஏற்றுக்கொள்வதென்றும், முக்கியத்துவம் வாய்ந்த பிரதான காரியங்களிலெல்லாம் எனது முடிவை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும் நாங்கள் உடன்பாடு செய்து கொண்டோம்..."

"அதன் படி நடந்து கொண்டதால் நாங்கள் பிரச்சினை இல்லாமலும் சந்தோசமாகவும் வாழ்ந்து வருகிறோம்."

–இப்படி அவர்கள் கூறி முடித்தார்.

பேட்டி கண்டவர் விளக்கம் கேட்டார். "சாதாரண காரியங்கள் என்றால் என்ன, பிரதான காரியங்கள் என்றால் என்ன?"

அந்தக் கணவர் விளக்கமளித்தார். "வீட்டில் என்ன என்ன வாங்குவது, என்ன சமைப்பது, வீட்டுக்குள் யார் யார் எப்படி எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது போன்ற சாதாரண அற்ப விசயங்களிலெல்லாம் மனைவிதான் முடிவெடுக்க வேண்டும்."

"நீங்கள் முடிவு செய்யும் மிகவும் பிரதானமான உங்கள் பொறுப்புகள் என்னென்ன?"

''நான் பொறுப்பு எடுத்துக் கொள்வது உலகளாவிய மிகப் பெரிய நிகழ்வுகள் சம்பந்தப் பட்டவை மட்டுமே. ஐ.நா. சபையில் இந்தியாவின் நிலைப்பாடு என்ன? இந்தியா, பாகிஸ்தான், சீனா, இலங்கை இந்த நாடுகளெல்லாம் எப்படி என்ன விதமான உறவுகளுடன் இருக்க வேண்டும்? இது சம்பந்தமாக முடிவெடுக்கும் அதிகாரம் எனக்கு மட்டுமே உண்டு. அவற்றில் எனது மனைவி தலையிடக் கூடாது."

சாதாரண விசயம், அசாதாரணமான விசயம் என்று வேடிக்கையாக இது விவரிக்கப்பட்டாலும் இதன் பின்னணியில் ஓர் அறிவியல் நுட்பம் உள்ளது.

பெண்கள் பெரும்பாலும், தாங்கள் தொடர்பு கொள்ளும் மிகச் சிறிய நிகழ்வுகளில் ஈடுபாடு உள்ளவர்களாக இருப்பார்கள். ஆகவே மிகச் சுலபமாக அதனை நிறைவேற்றி மகிழ்வடைவார்கள்.

ஆண்களைப் பொறுத்த வரை அவர்கள் எப்போதும் பெரிய விசயங்களிலேயே ஈடுபாடு காட்டி வருவார்கள்.

நல்லதொரு வேலையைத் தேடுவதிலும், வசதியானதொரு வாழ்க்கையை அமைத்துக் கொள்வதிலுமே ஆண்கள் அக்கறை காட்டுவார்கள்.

ஓர் ஆணும் பெண்ணும் தங்கள் வேலைக்கான இன்டர்வியூவுக்கு செல்வதாக வைத்துக் கொள்வோம்.

போகும் வழியில் ஆணுக்கு நெருக்கமான நண்பரோ அல்லது பெண்ணுக்கு நெருக்கமான தோழியோ வருவதாக வைத்துக் கொள்வோம். அவர்கள் எப்படி நடந்து கொள்வார்கள்?

ஆண்களை பொறுத்தவரையில் அவர்கள் நண்பரைப் புறக்கணித்துவிட்டு இன்டர்வியூவுக்கு சரியாகச் சென்றுவிடுவார்கள்.

பெண்களைப் பொறுத்த வரையில் அவர்கள் தங்களது மனதுக்குப் பிடித்த தோழியைக் கண்டுவிட்டால், இன்டர்வியூவைக் கூட மறந்து விடும் சாத்தியம் உண்டு.

ஏன் இப்படி?

அவர்கள் மன இயல்பு இப்படித் தான் உள்ளது.

ஆண்களைப் பொறுத்த வரையிலும், அவர்கள் பெரிய பெரிய சாதனைகளை எதிர்நோக்கி உள்ளதால் அவர்கள் பெரும்பாலும் மனநிறைவற்றவர்களாகவே காணப்படுவார்கள். இதனால் பெண்களை விட ஆண்களிடம்தான் தாழ்வு மனப்பான்மை அதிகமாகக் காணப்படுகிறது.

ஆணும், பெண்ணும் சேர்ந்து வாழ்ந்திடும் போதுதான் அவர்களிடையே மனோ சக்தியானது ஒருவிதச் சமநிலை ஏற்படும் வாய்ப்பு உருவாகிறது.

சிறிய விசயங்களிலும் ஈடுபட்டு மனச் சமாதானம் அடையும் தன்மையை ஆண்கள் கற்றுக் கொள்கிறார்கள்.

பெரிய விசயங்களிலும் பொறுப்பு எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற பொறுப்புணர்வை பெண்கள் கற்றுக் கொள்கிறார்கள்.

இதனால் தான் ஆண்களில் பலர் திருமணத்துக்குப் பின் தாழ்வு மனப்பான்மையிலிருந்து விடுபடுகிறார்கள்.

இதனால் தான் பெண்களில் பலர் எதிர்காலத்துக்கு முக்கியத்துவம் கொடுத்து உடைமைகளை சேர்த்துக் கொள்வதிலும் அக்கறை காட்டுகிறார்கள்.

இல்வாழ்க்கைக்கும் ஆன்மிகத்துக்கும் என்ன தொடர்பு?

கணவன் மனைவியாக இல்வாழ்க்கை மேற்கொள்வது ஆன்மிகத்துக்கு விரோதமானதா?

ஆன்மிகத்தில் ஈடுபாடு கொண்ட பலர்

திருமணம் செய்வது ஆன்மிக முயற்சிகளுக்கு இடையூறாக உள்ளது என முடிவு செய்து திருமணமே செய்து கொள்ளாமல் இருந்து விடுகின்றனர்.

உண்மையான ஆன்மிகத்துக்கும், திருமணத்துக்கும் எந்த முரண்பாடும் கிடையாது.

ஆன்மிகம் என்பது ஒரு வாழ்வியல் முறை. நாம் எப்படி வாழவேண்டும் என்பதைக் கற்றுக் கொடுப்பது தான் உண்மையான ஆன்மிகம்.

ஆகவே உண்மையான ஆன்மிகம், இல்வாழ்வுக்கும் கூட உதவி புரிகிறது.

இரண்டுமே ஒன்றுக் கொன்று உதவியாக அமைந்துள்ள காரணத்தினால் தான், திருமணம் செய்து கொள்ள அக்கறை காட்டாதவர்களையும் திருமணம் செய்து கொள்ளும்படி நாம் அறிவுரை கூறுவதுண்டு.



## ?கேள்வி பதில்¿

**கேள்வி :** அன்புள்ள ஐயா, நான் தங்களுடைய கருத்துக்களைப் புரிந்து கொள்ள முயன்று கொண்டிருக்கிறேன். அகத்தில் சும்மா இருக்குமாறு நீங்கள் கூறுகிறீர்கள். அதாவது மனதில் எந்த எண்ணம் வந்தாலும் அவற்றை தடுக்காது அப்படியே அனுமதிக்குமாறு சொல்கிறீர்கள். நீங்கள் கையில் எடுக்காத நிலையில் அந்த எண்ணங்களுக்கு ஆயுள் அரை நொடிதான் என்று சொல்கிறீர்கள். ஆனால் அந்த அரை நொடியில் அந்த எண்ணங்களை கையில் எடுக்காது இருக்க நான் விழிப்பு நிலையில் தானே இருந்தாக வேண்டும்? விழிப்பு நிலையில் இல்லாமல் அப்படியே எல்லா எண்ணங்களையும் விட்டுவிட்டால் நான் எப்போதும் பல எண்ணங்களோடு மயக்க நிலையில் இருப்பதாய்த் தான் உணர்கிறேன். பல எண்ணங்கள் தோன்றிக் கொண்டே இருக்க நான் அவற்றை அனுபவிப்பவனாய் சில நேரம் துக்கத்தோடும் சில நேரம் மகிழ்ச்சியோடும் இருப்பதால் தெளிவு நிலை ஏற்பட்டது போல தெரியவில்லை; குழப்பத்தில் நீடிப்பது போல் தான் படுகிறது. இதிலிருந்து தெளிவு பெறுவது எப்படி?

**பதில் :** சும்மா இருப்பது நமது செயலன்று. அது நம் முயற்சியால் வருவதுமன்று மனதில் தோன்றும் எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் எதிர்த்து நாம் எதுவும் செய்ய முடியாது என்பதையும் அவை நம் கட்டுப்பாட்டில் இல்லை என்பதையும் மிகத் தெளிவாக புரிந்து கொள்வது மட்டுமே நமது வேலை.

உண்மையில் அவற்றின் ஆயுள் அரை நொடி மட்டுமே. நம்மை அறியாமல் நாம் அவற்றுடன் போராடுவதால் மட்டுமே அவை தொடர்ந்து இருப்பது போல் தோன்றுகிறது. அதுவாக எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் இருந்துவிட்டு போகட்டும். தொடர்ந்து விழிப்பு நிலையில் இருக்க வேண்டும் என்பதே போராட்டம் தான். நமக்கு தெரிந்து நாமாக எதிர்த்துப் போராடாமல் இருந்தால் போதும். மேலும் இதைப் புரிந்து கொள்வதால் எந்த எண்ணமும் உணர்வுகளும் வரவே வராத நிலை ஏற்பட்டுவிடும் என்று பொருள் கொள்ள வேண்டாம். நமது இயல்புக்கு தகுந்த அனைத்து உணர்ச்சிகளும் எண்ணங்களும் தானாக ஏற்பட்டுவிடும். இதுவே பிரவாக நிலை, விடுதலை பெற்ற நிலை.

K.S. ஜீவமணி
செல் : 97891-65555

## பகவத் பாதை சந்தா விபரம்

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

| | | |
|---|---|---|
| ஓர் ஆண்டு சந்தா | - | ரூ. 100/- |
| ஐந்தாண்டு சந்தா | - | ரூ. 500/- |
| ஆயுள் சந்தா | - | ரூ, 1000/- |

சந்தா தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Cheque மூலம் அனுப்பலாம்.

www.pravaagam.org என்ற இணைய தளத்தில் Credit Card / Debit Card மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank-ல் Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம்.

Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 92620 61838 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.



பெங்களூரில் ஐயா



ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் பகவத் மிஷன் தலைவர் டாக்டர் N.கைலாசம் அவர்கள்

# சோம்பலும் - செயலற்ற செயலும்

சாஸ்திரங்களில் தமோ குணம், ரஜோ குணம், சத்வ குணம் என

நம்முடைய மனோ இயக்கம் மூன்று வகையில் இயங்குவதாக கூறப்படுகிறது.

தமோ குணம் என்பது, சோம்பலுடன் செயலற்றிருக்கும் நிலையைக் குறிக்கிறது.

ரஜோ குணம் என்பது செயல்படுவதில் மட்டுமே ஆர்வம் காட்டும் நிலையைக் குறிக்கிறது.

சத்வ குணம் என்பது செயல்பட்டாலும், செயலற்றிருக்கும் விளைவைக் குறிக்கிறது.

பலர் செயலற்றிருக்கும் தமோ குணத்தையும், செயலோடு இருந்தும் செயலற்றிருக்கும் சத்வ குணத்தையும் ஒன்றாகப் புரிந்து கொள்கின்றனர்.

பொதுவாக எல்லோருக்குமே மனதின் இயக்கத்தில் இந்த மூன்று குணங்களும் மாறி மாறித்தான் ஏற்படுகின்றன. அது நம் மன இயக்கத்தின் இயல்பு.

தெளிந்தவர்கள் அனைவரும் மன இயக்கத்திலிருந்து விடுபட்டுவிட்டதாக எடுத்துக் கொள்ளக் கூடாது. மன இயக்கம் அனைவருக்கும் பொதுவானது. அதை எடுத்துக் கொள்ளும் அணுகுமுறையில் தான்

தெளிவடைந்தவர்களுக்கும், தெளிவடையாதவர்களுக்கும் வேறுபாடு உள்ளது.

ஆரம்ப காலச் சாதகர்கள் உலக வாழ்வையும், உலக இன்பங்களையும் புறக்கணித்து

ஆன்மிக அனுஷ்டானங்களில் மட்டுமே ஈடுபாடு காட்டி வருகின்றனர்.

உலகக் கடமைகள் யாவும், அவர்களது வழியில் குறுக்கிடும் தடங்கல்களாகவும், சுமைகளாகவுமே கருதுகின்றனர். இதனால் பலர் திருமணம் செய்து கொள்ளாமலும், அப்படியே திருமணம் செய்து கொண்டாலும் குழந்தைகளைப் பெற்றுக் கொள்ளாமலும் இருந்து வருகின்றனர்.

இவை அனைத்தும் அவர்களது ஆன்ம சாதனைகளுக்கு இடையூறு செய்திடுவதாகக் கருதி அவற்றிலிருந்து தப்பிச் சென்றுதான் ஆன்மிக சாதனைகளைத் தொடர்ந்திருக்கிறார்கள்.

தெளிவடைந்த நிலையில், இப்போது ஆன்மிக சாதனைகளுக்கும் ஒரு முடிவு ஏற்பட்டுவிட்டது. ஆன்மிக சாதனை என, தனியே ஒரு சாதனை தேவையே இல்லை.

ஆன்மிகம் என்ற பெயரில் நாம் சில பயிற்சிகளிலும், அனுஷ்டானங்களிலும் ஈடுபட வேண்டிய கட்டாயத்திலிருக்கும் போது

நமது தொழிலிலிருந்தும், பழக்கமான சூழ்நிலைகளிலிருந்தும் நமக்கு விடுதலை தேவை தான்.

ஆனால், ஆன்மிக உலகம் என ஓர் உலகத்தையே நாம் அப்புறப்படுத்திய பிறகு ஆன்மிகம் என்ற பெயரில் நமக்கு எந்தவொரு தப்பியோடுதலும் தேவையில்லை.

நாம் ஒரு விடுதியில் ஒரு வருட காலம் தங்க வேண்டியுள்ளது என வைத்துக் கொள்வோம். நமது அறையில் நம்மைத் தவிர இன்னும் நான்கு நபர்கள் தங்கியிருக்கிறார்கள். அவர்கள் அனைவரும் ஒவ்வொரு விதமான இயல்பு உடையவர்கள். அவர்களை அனுசரித்து போவது மிகவும் கடினம்.

நாம் வேறு அறையில் தங்குவதற்கு முயல்கிறோம்; வாய்ப்பு கிடைக்கவில்லை. ஒரு வருடம் அந்த நபர்களுடன் அந்த அறையில் தான் தங்கி ஆக வேண்டியுள்ளது.

அவ்வாறு தங்கித்தான் ஆக வேண்டும் என்ற நமது நிலையை நாம் மனப்பூர்மாக ஏற்றுக் கொண்டால் மட்டுமே நம் மனம் அதற்கு ஒத்துழைப்பு கொடுக்கும்.

போர் முனையில் நடந்த ஒரு சம்பவத்தைக் கூறுவார்கள்.

தளபதி ஒருவர் தனது வீரர்களுடன் தங்களது வாகனங்களில் போர்முனைக்குச் செல்கிறார். போர் முனைக்குச் சென்றதும் அந்தத் தளபதி தங்களது வாகனங்கள் அனைத்தையும் வரிசையாக நிறுத்துமாறு உத்தரவிடுகிறார்.

வாகனங்கள் வரிசையாக நிறுத்தப்படுகின்றன. அந்த வாகனங்கள் அனைத்தையும் தீ வைத்துக் கொளுத்துமாறு அடுத்த உத்தரவு பிறப்பிக்கிறார். வாகனங்கள் அனைத்தும் அழிக்கப்பட்டு விட்டன. இனி?

வீரர்கள் எதிரிகளுடன் போராடி ஜெயித்தால் மட்டுமே உயிர் பிழைக்க முடியும். தப்பி ஓடிச் செல்ல எந்த வாகனமும் கிடையாது.

இந்நிலையில் அவர்கள் முழு ஈடுபாட்டுடன் போரிட்டு போரில் வெற்றி பெற்றதாகக் கூறப்படுகிறது.

நாம் செய்யும் பணிகளில் முழு ஈடுபாட்டுடன் செய்திடும் போது

அதுவே யோகமாகி விடுகிறது.

அந்தச் செயலை நேர்த்தியாகவும், சிரமமில்லாமலும் செய்திடும் பலவகை உத்திகளும் நமக்கு உதயமாகின்றன.

நமது தொழில்களை முறையாகத் திட்டமிடும் போது நமக்குத் தேவையான ஓய்வு, தாமாகவே நமக்குக் கிடைத்து விடுகிறது.

ஓய்வில்லாமல் உழைக்க வேண்டும் என்பதும் தவறு; உழைக்காமல் தப்பி ஓடுவேன் என்பதும் தவறு.

முறையாகத் திட்டமிடுவதன் மூலம் நமது நேரத்தையும் உழைப்பையும் முறைப்படுத்திக் கொள்ளலாம்.

நம் மனம் தப்பி ஓடுவதிலேயே ஈடுபாடு கொள்வதாக இருந்தால்

அதுவும் நம் செயலில் பொருந்துவதற்கு வாய்ப்பில்லை.

நாம் நமது செயல்பாடுகளோடு மனப்பூர்வமாக இணைந்திருப்பதுதான் உண்மையில் நமது செயல்களிலிருந்து விடுபடுவது ஆகும்.

**இதுவே செயலற்ற செயல்.**

**– ஸ்ரீ பகவத்**

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

தற்போது நமது பகவத் ஐயா அவர்கள் பெங்களூரில் தங்கியிருக்கிறார். பெங்களூரில் இருக்கும் நமது பகவத் பாதை அன்பர்கள் ஐயாவை சந்தித்து உரையாடி தங்களது மகிழ்ச்சியை தெரிவித்திருக்கிறார்கள். மேலும் பெங்களூர் அன்பர்கள் ஒன்றிணைந்து ஸ்ரீ பகவத் மிஷனின் பெங்களூர் மையம் ஒன்று தொடங்கியிருக்கிறார்கள். பெங்களூர் மைய அன்பர்கள் ஐயாவின் சிறப்புரை கூட்டங்களையும், ஞானமுகாமையும் ஏற்பாடு செய்து இதன் மூலம் ஐயாவின் கருத்துகளை பெங்களூர் முழுவதும் கொண்டு செல்வதற்கான முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்களது முயற்சிக்கு நம் அனைவரது சார்பாகவும் பாராட்டுக்களையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக்கொள்வோம்.

மேலும் உலகெங்கும் ஆன்மிக புத்தகங்களை வெளியிடுவதில் மிகவும் புகழ் பெற்ற பதிப்பகமான "Yogi Impressions" என்ற பதிப்பகம் நமது ஐயாவின் "Don't Delay Enlightenment" என்ற நூலை "Understanding Enlightenment" என்ற பெயரில் வெளியிட்டுள்ளது. இந்நூல் "www.yogiimpression.com என்ற இணைய தளத்தில் Online-ல் விற்பனையாகிக் கொண்டிருக்கிறது. இது நமது ஐயா வழங்கிய ஞானப் புரிதலை உலகெங்கும் கொண்டு செல்வதற்கான ஒரு சிறந்த வாய்ப்பாக அமையும்.

நமது பகவத் பாதையில் பயணிக்கும் நீங்கள் அனைவரும் இச்செய்தியை உலகெங்கும் உள்ள உங்கள் நண்பர்கள் உறவினர்கள் அனைவருக்கும் தெரிவித்து அவர்களும் தெளிவு பெற வேண்டுகிறோம்.

ஆசிரியர். K.S. ஜீவமணி
செல் : 97891-65555

## ஸ்ரீ பகவத் ஐயாவின் பெங்களூர் நிகழ்ச்சி

தலைப்பு: **தன்னை அறியும் ஞானம்** (தமிழ்)
**Self Realisation**

இடம்: **Vigneswara Temple,**
**26th Main, BTM 2nd Stage, Bengaluru.**

நாள்: **19-04-2015 ஞாயிறு மாலை 6:00 to 8:00**
**கருத்துப் பரிமாற்றம் : தமிழ் மற்றும் ஆங்கிலம்**

**அனுமதி இலவசம்.**

தன்னை அறிந்து ஞானம் பெற அனைவரும் வாரீர்.
மேலும் தொடர்புக்கு :
099867 26000, 98867 47564, 95382 12812




"Yogi Impressions" என்ற பதிப்பகத்தில் வெளியிடப்பட உள்ள ஐயாவின் நூல் முன்பதிவு செய்யப்படுகிறது. விலை ரூ. 200/-



சென்னை நங்கநல்லூரில் நடைபெற்ற ஐயாவின் சிறப்புரை நிகழ்ச்சி

# வேதாந்தம்

வேதாந்த சித்தாந்தத்தில் சிறந்து விளங்கிய பண்டிதர் ஒருவர் ஒருமுறை தொலைப்பேசியில் தொடர்பு கொண்டு நம்மிடம் பேசினார்.

"உங்களுடைய நூல்களில் நீங்கள் சாஸ்திரங்களுக்கு விரோதமாகப் பேசுவது போன்ற ஒரு தொனி உள்ளது. உங்களது கருத்துக்களும் புத்தரது கருத்துக்களும் ஒரே விதமான அடிப்படையைக் கொண்டவை."

"புத்தர் சாஸ்திரங்களுக்கு விரோதமாகப் பேசுவதாக பலரும் கருதுகின்றனர். உண்மையில் புத்தருடைய கருத்துக்களும் சாஸ்திரங்களின் கருத்துக்களோடு முரண்டவில்லை.

அதுபோல் நீங்களும் சாஸ்திரங்களுக்கு முரண்படவில்லை. சாஸ்திரங்கள் கூறும் சொற்களைப் பயன்படுத்தாமல் நீங்கள் வேறு சொற்களைப் பயன்படுத்துவதால், நீங்கள் புதிதாக எதையோ கூறுவதைப் போன்ற தோற்றம் உள்ளது.

உண்மையைக் கூறும் எவரும் சாஸ்திரங்களுக்கு விரோதமாகக் கூறி விட முடியாது.

– இப்படி அவர் எடுத்துக் கூறினார்.

நாம் ஓரளவு சாஸ்திரங்களுளோடு தொடர்பு கொண்டிருந்தாலும் சாஸ்திரங்களில் நாம் பாண்டித்யம் பெற்றிருக்கவில்லை.

சாஸ்திரங்களைப் பாடமாகப் படிக்காவிட்டாலும் சாஸ்திரங்கள் கூறும் மையக் கருத்தை ஓரளவு புரிந்து கொண்ட நிலையில் தான் நாம் நமது அனுபவத்தையும் ஆய்வையும் இணைத்து நமது கருத்துகளாக்கி வழங்கி வருகிறோம்.

சாஸ்திரங்களில் புலமையுள்ள பலரைப் பார்த்திருக்கிறேன். சாஸ்திரங்கள் எதற்காகக் கொடுக்கப்பட்டனவோ அதனை அவர்கள் புரிந்து கொண்டதாகத் தோன்றவில்லை.

பலர் புலமையைக் காட்டும் சான்றோர்களாக இருக்கிறார்களே தவிர, ஞானத்தையும் விடுதலையையும் அடைந்தவர்களாகத் தெரியவில்லை.

சாஸ்திரங்களை நீங்கள் படிப்பீர்களேயானால் ஒன்றை நீங்கள் காணுவீர்கள். ஞானத்தையும், விடுதலையையும் சாஸ்திரங்கள் எட்டாக்கனியாக்கி விடும். சராசரி மனிதரால் அடைய முடியாத ஒன்றாக விவரித்துவிடும்.

நமது அணுகுமுறையில் ஞானமும், விடுதலையும் எளிமையாக்கப்பட்டு விட்டன.

இதனைப் பலரும் எளிதாகப் புரிந்து கொண்டாலும் இது மிக மிக எளிமையாக இருக்கும் காரணத்தினால் "இவ்வளவு எளிமையாக இருக்கும் இது எப்படி மிகவும் உன்னதமான ஒன்றாக இருக்க முடியும்?"

–என்று தடுமாறி விடுகின்றனர்.

நமது புரிதலை உறுதி செய்து கொள்ளும் நோக்கத்தில் இந்த வேதாந்தம் நூல் எழுதப்பட்டிருக்கிறது.



பக்கங்கள் 496 விலை: ரூ.250/-

இதன் முதல் பகுதியில் சாஸ்திரங்கள் கூறும் உண்மைகள் மட்டும் சாஸ்திரங்களின் வார்த்தைகளில் விளக்கப்பட்டுள்ளன.

இரண்டாவது பகுதியில் நாம் என்ன கூறுகிறோம் என்பது மட்டும் நமது வார்த்தைகளில் விளக்கப்பட்டுள்ளன.

மூன்றாவது பகுதியில் முதல் பகுதியையும், இரண்டாவது பகுதியையும் ஒப்பிட்டு, அவற்றில் நாம் எவற்றையெல்லாம் எப்படி எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதை விவரித்திருக்கிறோம்.

நீங்கள் அனைவரும் திறந்த மனதோடு அனைத்தையும் படித்து உணர்ந்து கொள்ள வேண்டுகிறேன்.

திறந்த மனதுடன் நீங்கள் இந்நூலை படித்துக் கற்றுக் கொள்ள ஆரம்பிப்பீரகளேயானால் உங்கள் உள்ளமே உங்களுடைய அகக்குருவாக இருந்து மெய் ஞானத்தை உங்களுக்கு விளக்கிக்காட்டும்.

உங்களுடைய தேடுதலும், முயற்சியும் வெற்றிடைய எமது நல்வாழ்த்துக்கள்.

– ஸ்ரீ பகவத்

இந்நூல் ஏற்காடு ஞானமுகாமில் மே1 அன்று வெளியிடப்பட உள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.



## குணம்

ஜென் கதை

ஜென் மாணவன் ஒருவன், தன் குருவிடம் தன்னிடமுள்ள குறை ஒன்றை முறையிட்டு தீர்வு காண முயன்றான்.

"நான் ஒரு பிரச்சனைக்கு கூட மிக விரைவாக கோபப்படுகிறேன். அதிலிருந்து என்னால் விடுபட முடியவிலலை."

"உன் கோபத்தின் தீவிரத்தை நான் இப்போது பார்க்க விரும்புகிறேன்."

"முடியாது குருவே, நினைத்தவுடன் எல்லாம் என்னால் கோபத்தைக் காட்ட முடியாது."

"சரி எப்போது தான் உன்னால் காட்ட முடியும்."

"சொல்ல முடியாது, அது முற்றிலும் எதிர்பாராமல் நிகழ்வது."

"நீ நினைத்தவுடன் உன்னால் காட்டவும் முடியாது, அது உன் கட்டுப்பாட்டிலும் இல்லை என்பது புரிகிறதா?"

"ஆமாம், பிறகு எப்படித் தான் அதிலிருந்துத் விடுபடுவது?"

"அது உனக்கு சொந்தமானதல்ல, அதிலிருந்து விடுபட வேண்டிய பொறுப்பும் உனக்கு இல்லை. அது வெளிப்பட்ட பிறகு தான் உனக்கே தெரிகிறது. அதுவரை அது உன் கையில் இல்லை, கோபம் ஏற்பட்டது கவனத்திற்கு வந்த பிறகு கோபத்தை அங்கீகரிப்பதும் அல்லது புறக்கணிப்பதும் மட்டுமே உனக்கான வாய்ப்பு என்பதை புரிந்து கொள்."

மாணவன் மிக நன்றாகப் புரிந்து கொண்டான். கோபத்தோடு கொண்ட தன் போராட்டத்தை கைவிட்டான். அதிலிருந்து விடுதலை அடைந்தான்.






நமது மனம் இன்ப, துன்ப அனுபவத்தில் பொருந்தியிருப்பதே 'மனோலயம்'.

மனம் எந்த லயத்திலும் நிலை கொள்ளாமல் திரவ நிலையில் இயங்குவதே 'மனோலயநாசம்'. (உண்மையில் மனோ நாசம் இதுவே.)



ஸ்ரீ பகவத்

**Registration Number of the News Paper TNTAM/2014/57698**

*If undelivered please return to:*




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

## சத்சங்கம்

சென்னை ஸ்ரீ பகவத் மிஷன் மையத்தில் ஒவ்வொரு வாரமும் ஞாயிற்றுக்கிழமை மாலை 5-30 மணி முதல் 7-00 மணி வரை ஐயாவின் கருத்துக்களில் ஈடுபாடு கொண்ட அன்பர்கள் கூடி சத்சங்கம் நடைபெற்றுக் கொண்டு வருகிறது. வாய்ப்புள்ள அன்பர்கள் கலந்து கொண்டு பயனடைய அழைக்கிறோம்.

இப்படிக்கு
ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்,
23/10, பழைய பரோடா வங்கி தெரு,
செக்ரட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை- 600053.
செல்: 9884097438, 9381019479, 9444756744
ஐயாவின் அனைத்து நூல்களும் இங்கு கிடைக்கும்.

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555